SRI K. ANBAZHAGAN : மறுபடியும் புதுப்பிக்கப்பட இருக்கும் வாக்காளர் பட்டியல் முன்னர் இருந்ததுபோல் . . . .

MR. SPEAKER : இப்பொழுது நாம் 419-வது கேள்வியில் இருக்கிறோம்.

SRI K. VINAYAKAM : அவர் எல்லாவற்றிலும் முன்னேற்றம் தான் (சிரிப்பு).

*Electoral Rolls*

* 420 *Q*.—SRI S. PAKKIRISAMI PILLAI : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether the electoral roll for the whole of the City of Madras would be revised and printed anew in this year before the election for the seats in the Corporation of Madras commences; and

(*b*) if not, what are the reasons?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) No, Sir.

(*b*) Intensive revision of the electoral rolls of the City of Madras is made according to a definite programme spread over three years. With reference to this programme, the rolls of three Assembly Constituencies, viz., Harbour, Washermanpet and Basin Bridge have been taken up for intensive revision this year and the rolls of the remaining six Assembly Constituencies are being revised this year only non-intensively. However, lists of new colonies in non-intensive areas are being prepared, list of additions, obtained from the Corporation tax collection staff, the houses numbered and the rolls revised. The intensive revision of the rolls of the remaining six constituencies will ordinarily be completed in a period of two years, three constituencies being taken up in each year.

SRI S. PAKKIRISAMI PILLAI : சென்னை நகரத்தில் புதிதாக சேர்க்கப்பட்ட அய்யனாவரம் போன்ற பகுதிகளில் இன்டெக்ரல் கோச் பாக்டரி காலனிகள் புதிதாக கட்டப்பட்டிருக்கின்றன. அந்தக் காலனிகளில் இருக்கும்படியான மக்களுடைய பெயர்களை அந்த வாக்காளர் ஜாப்தாவில் சேர்க்கவில்லை என்பது உண்மையா? அப்படியானால், அதற்கான நடவடிக்கையை எடுத்துக்கொள்ள அமைச்சர் அவர்கள் முன்வருவார்களா?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : வோட்டர்கள் ஜாப்தாவில் எல்லா இடங்களில் உள்ளவர்களும் சேர்க்கப்படவேண்டும் என்பதுதான் முறை. அப்படிச் சேர்க்கவில்லையென்றால் அதுவும் சேர்க்கப்படும்.

SRI K. ANBAZHAGAN : மறுபடியும் புதுப்பிக்கப்படவிருக்கும் வாக்காளர் பட்டியலில், வருகிற தேர்தலில் புதிய அடிப்படையில், புதிய பாகுபாடுகளை அடிப்படையாக வைத்துக்கொண்டு நடைபெற வேண்டிய காரணத்தால், அதற்கு முன்னாலேயே தென்பகுதி முழுவதையும் புதிய வாக்காளர் பட்டியலில் சேர்க்க ஏற்பாடு செய்யப்படுமா? இடையே விட்டு விடப்படுகிற குப்பங்களில் உள்ளவர்களும் பட்டியலில் சேர்த்துக்கொள்ளப் படுவார்களா ? அப்படித் தயாரிக்கப்படும் பட்டியலில் பிழைகள் இல்லாமல் இருப்பதற்கு அமைச்சர்களைக்கொண்ட, அல்லது ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களைக்கொண்ட ஒரு ஆலோசனைக் குழு அமைத்துக்கொள்ளப்படுமா?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : பிழைகள் இல்லாமலிருக்கவேண்டும் என்பதுதான் அரசாங்கத்தின் எண்ணம். அடுத்த தேர்தலுக்குள் இவைகள் கவனிக்கப்படும்.

22nd September 1958]

SRI K. VINAYAKAM : In the Assembly constituencies where this intensive verification is not carried on now, will the Government think of the desirability of consolidating the entire list and preparing one list? The original list was prepared during the 1951 general elections. Additions have been made to that list and there are about six additions with the result, the list has become cumbersome. Will the Government give instructions to the Corporation authorities to consolidate all the lists into one so that it will be useful to the candidates?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : The Government will take necessary action to see that a proper list is prepared.

SRIMATHI T. N. ANANDANAYAKI : எலெக்டோரல் ரோல்களிலே "சுப்ரமணியம் அலியாஸ் சுப்புணி" என்ற பெயரை வைத்துக்கொண்டு, இரண்டிலே ஏதாவது ஒரு பெயரை அவர்கள் ஏற்றுக்கொண்டால், "எனக்கு அலியாஸ் பெயர் இருக்கிறது, ஆகையால் நான் தான் வோட்டர்" என்று சொல்லக்கூடிய முறையில் குழப்பங்கள் ஏற்பட்டு, இறுதியில் நாமினேஷன் சமயத்தில் தகராறுகள் வருகின்றன. ஆகையால், "அலயாஸ்" பெயர்கள் கொடுக்கப்படக்கூடாது, எந்த எந்த பெயரை வைத்து கொண்டிருக்கிறார்களோ, வழக்கத்தில் இருக்கிறதோ, அதை மட்டும் தான் எலெக்டோரல் ரோலிலே பதிவு செய்ய வேண்டும். அப்படிப் பதிவு செய்துகொண்டிருந்தால்தான் அவர் சரியான வோட்டராக இருப்பார் என்ற முடிவுக்கு அரசாங்கம் வழி செய்யுமா?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : அரசாங்கம் இவைகளையெல்லாம் கவனிக்கும்.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, the electoral rolls are prepared under the direction of the Election Commission. How they should be prepared has to be decided by the Election Commission only. We are only executing the suggestions given by the Commission. Therefore there is the independent authority in charge of the preparation of the electoral rolls. Whatever suggestions we make the Election Commission is the ultimate deciding authority. Therefore if we are unable to accept or carry out any of the suggestions made by hon. Members, it need not be thought that the Government have not bestowed sufficient attention on those suggestions. It is the Election Commission that should take a final decision in respect of these suggestions.

SRI A. A. RASHEED : Will the elections to the Corporation be postponed until the electoral roll is revised?

MR. SPEAKER : How does it arise out of the main question?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : It is a separate question, Sir.

*National Extension Service, Tanjore district*

* 421 *Q.*—SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் முதலமைச்சர் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லாவில் இயங்கிவரும் தேசீய விஸ்தரிப்பு வட்டார அபிவிருத்தி பகுதிகள் எத்தனை?